# குமாரி சூர்யா

குமாரி சூர்யா! எந்தப் படத்து விந்தைக் கதாநாயகி, களிப்பிலாடும் மயிலோ, கானம் பாடும் குயிலோ, கண்டாரைக் கொல்லும் கட்டழகியோ, என்றெல்லாம் கேட்டு விடாதீர்கள். நமக்குத் தினத்தந்தி செய்யத் தெரியாது. பட உலகப் பாவையல்ல, நான் குறிப்பிடும் குமாரி, பாவிகளை வதைத்தொழித்து, புண்ணிய வான்களை ரட்சிக்கும் கடவுளர் வரிசையில் ஒருவர் மாஜி கடவுள்!

'மாஜி கடவுள்கள்' என்ற ஏடு கண்ட நண்பர் பலர் மேலும் சில தகவல்கள் கேட்டனர்.

நானும் வேறு சில ஏடுகளைப் படித்தேன்.

குமாரி சூர்யாவைச் சந்தித்தேன்.

குமாரி சூர்யா, ஜப்பானியக் கடவுள் – இன்றல்ல – தெளிவு பிறந்துவிட்டதே ஜப்பானில்! அங்கு என்ன, ஆச்சாரியாரா இருக்கிறார், அழுகலை அங்காடியில் வைத்து விற்பனை செய்ய! ஜப்பான் நாடு, வேறு பல நாடுகள் போல், எண்ணற்ற கற்பனைக் கடவுளரைத் தொழுது வந்த நாட்களில், கோலாகலமாகக் கொலு வீற்றிருந்த 'தெய்வம்' குமாரி சூர்யா.

பொங்கற்புது நாளைக் கூட, வைதீகம் பேசி, வஞ்சக வாழ்வு நடத்தும் வன்கணாளர்கள், சங்கராந்திப் பண்டிகையாக்கி, சூரிய பகவானுக்குப் பூஜை செய்து வைக்கிறோம், அவர், ஏழு குதிரை பூட்டிய இரதத்தில் செல்பவர், இந்நிறத்தான் இவ்வண்ணத்தான் என்று கூறுகிறார்களல்லவா – அதே 'சூரிய பகவான்' ஜப்பானில் சூரிய குமாரி! இங்கே தேவன்! அங்கு தேவி! இப்போதல்ல! எத்தர் தீட்டியதை ஏற்றுக் கொள்ள ஏமாளிகள் ஏராளமாக இருந்த நாட்களில்! சூரியன் – பல்வேறு நாடுகளிலும் 'தெய்வம்' என்று கொண்டாடப்பட்ட போதிலும், அனேகமாக எங்கும் ஆண்

வடிவமே தந்தனர் – ஆனால் ஜப்பானியப் புராணீகன், பெண் வடிவு தந்தான். பெண் என்று கூறியிருப்பானே தவிர; அந்த நாட்டுப் புராணீகன், கற்பனைத் திறமும் கவர்ச்சியும் மிகுந்த கதை புனைந்திருக்கமாட்டான். அதற்கு அலாதியான அறிவும் கலைத் திறனும் இருக்க வேண்டுமே. அந்தத் திறன் 'பாரத்வர்ஷ'த்துக்கு மட்டும்தானே உண்டு, என்று பேசிடும் பழைமை விரும்பி, தெரிகிறார்!

ஜப்பான் புராணீகன், எந்த வகையிலும், நமது புராணீகர்களுக்குச் சளைத்தவனல்ல. அவனும் அள்ளி விட்டிருக்கிறான், அண்டப் புளுகுகளை, கொண்டமட்டும். உலகை உணரவும், உள்ளத் தெளிவு பெறவும் பக்குவம் பெற்ற பிறகுதான், ஜப்பானியர், அவைகளைக் 'கட்டுக் கதைகள்' என்று ஒதுக்கித் தள்ளினர்; அதற்கு முன்பு அவர்களும் அக்கதைகளை 'இராமாயண மகாபாரதமாக'க் கொண்டு, பாராயணம் செய்து வந்தனர். பூஜாமுறைகள் வகுத்துக் கொண்டனர். புனித விழாக்கள் நடத்தி வந்தனர். படித்தாலும் படிக்கப் பக்கம் நின்று கேட்டாலும், பாபம் போகும் புண்ணியம் வந்து சேரும் என்று கூறிக் கொண்டாடினர். தெளிவு பிறக்கும் வரையிலே அவை 'தேவமாக்காதைகள்' – பகுத்தறிவு வென்றது. குமாரி சூர்யாவுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டார்கள். இங்குபோல் அல்ல. அங்குக் குமாரி சூர்யா மாஜி கடவுள்.

இங்கு? எதை விட்டனர் – எதை மறந்தனர்! புதுப்புது 'வரவுகளுக்கு' அல்லவா தவம் கிடக்கிறார்கள்.

கற்பனைத் திறத்துடன்தான் ஜப்பானியப் புராணீகன் கடவுட் காதை தீட்டினான்!

''அன்பா! என் இதயத் துடிப்பை
அறியாயா? ஆவி சோருது, கண்ணாளா!
ஆரத்தழுவி எனக்கு ஆனந்தம் ஊட்டமாட்டாயா?
இதோ பார்,
என் கண்கள் வெளியிடும்
தாபத்தை
விரகதாபத்தால் என்
உடல், எப்படி நெருப்பாகக்
கொதிக்கிறது பார்! என்னை
வாழ்விக்க வல்லவனே! வசீகரம்

மிக்கவனே! ஆடிப்பாடி
மகிழலாம்! ஜோடிப் புறாவாகலாம்!''

அணங்கு அழைக்கிறாள் ஆணழகனை! அவள் துயரம் அவளன்றி யாரறிவார்!

ஆணழகன், இணங்கவில்லை.

முறையல்ல என்றான்!!

என் செய்வாள், காதலால் தாக்குண்ட காரிகை. ''என் செய்வேன், எவ்வாறு உய்வேன்! உன்னைக் கூடினாலன்றி உயிர் நில்லாது – என் உள்ளத்தில் மூண்டுள்ள காதல் தணியாது – நான் என்ன அழகாகயில்லையா – பருவ கருவத்தைக் காட்டிடும் என் அங்கங்களைப் பார்த்துமா, இந்தத் தயக்கம்! பாகு, என் மொழி! பங்கஜம், என் விழி! பழகினால் தெரியும், நான் தரும் தேனின் சுவை!'' என்றெல்லாம், மீண்டும் பேசிட வேண்டிய 'தொல்லை' அந்த முல்லைக்கு ஏற்படவில்லை. அவன் அவளை மறுக்கவில்லை! இன்பம், பெறக்கூடாது என்பதல்ல, அவன் எண்ணம்! அவனுக்கு ஏதும் 'தவம்' இல்லை – அவளைக் கண்டால், ஐயனைக் காண முடியாதே, அவர் அருள் பெற இயலாதே என்ற சிக்கல் ஏதும் இல்லை.

அவன், முடியாது என்று கூறவில்லை – முறையல்ல என்று மட்டுமே கூறினான் – அதாவது ஆணழகனிடம் பெண்ணரசி, வலியச் சென்று காதல் மொழி பேசி, அழைப்பது முறையல்ல, அந்த 'உரிமை' ஆடவனுக்குத்தான், எனவே காதலை வெளியிடும் வேலை தன்னைச் சார்ந்தது என்றான்.

ஒரு புறம் சென்றிரு! – என்றான்.

அவள் ஒதுங்கி நின்றாள் – விருந்து கிடைத்திடும் என்ற உறுதியை அவன் கண்கள் வெளியிட்டதால் பெற்ற மகிழ்ச்சியுடன்.

ஆணழகன் துவக்கினான்!

''பாகுகனி மொழி மாதே! என்னைப் பார்த்துப்
பேசிடின், என்னதீதே! சோலைப்
பசுங்கிளியாளே! என்னைச் சேர்ந்து
சுகம் தராய், மானே! புத்தம் புதிய
நறுமலரே! சித்தமிரங்கி எனை
ஏற்பாய்! சத்தியம், நான் உன்னைப்
பிரியேன், சந்ததம் இன்பம் தருவேன்,

மெத்தவும் வாடினேன், காதல், என்
மேனி அழிக்குது, மானே!''

இருவரும் இன்பபுரிக்குப் பயணமாயினர்,

புண்ய கதை - மலைக்காதீர்கள் - புதிய சினிமாப் படமல்ல!

சினிமாப் படத்திலேகூட, இப்படிக் காட்சியும் உரையாடலும் சுலபத்திலே புகுத்திவிட முடியாது - பண்பு காப்பாற்றப்பட வேண்டும் என்பதற்காக உள்ள கத்தரிக்கோலினர், கடுங்கோபம் கொள்வர்!

வலியச் சென்று, அழைத்த ஆரணங்கும், அது முறையாகாது நான் அழைக்க வேண்டும் என்று முறை அறிவித்த ஆணழகனும், மானிடரல்ல, கடவுளர்!!

இசனாகி - ஆண் கடவுள்.

இசனாமி - பெண் கடவுள்.

கடவுளர் உலகத்துக் காதல் காட்சி - சாமான்யர்களுடைய தல்ல.

தேவலோகத் திருவிழா! பூலோக விஷயமல்ல! பூலோகமே, அப்போது இல்லை!

கடவுளர் உலகில், இசனாகி, இசனாமி எனும் இருவர். ஆதிப் பரம்பொருள்கள்!

அவர்கள் துவக்கிய 'ஆனந்தம்'தான் உலக அமைப்புக்கே காரணமாக அமைந்தது.

இந்தக் கடவுளர், நமது நாட்டுக் கடவுளரைவிட மெத்தச் சமர்த்தர்கள்!

இவர்கள் பெற்றெடுத்தவை, குழவிகள் அல்ல, நாடுகள், தீவுகள்!!

ஆமாமய்யா, ஆமாம்! இசனாகி, இசனாமி கலவியின் விளைவாகத்தான், ஜப்பான் பிறந்தது!! வேறு பல தீவுகளையும் இக்கடவுளர் பெற்றெடுத்தனர்.

ஒரு நாடு - பிறக்கிறதா செச்சே! இப்படி ஒரு பைத்தியக்காரத்தனமான 'கதை'யா - இதுவா புண்ய கதை!! தூ! தூ!!

நாடு என்றால், சாமான்யமா!

எவ்வளவு நிலப்பரப்பு - ஆறுகளென்ன, ஏரிகளென்ன மலைகளென்ன மடுவுகளென்ன, ஊர்களென்ன வெட்ட வெளி

களென்ன சாலைகள் சோலைகள், வயல்கள், வாய்க்கால்கள் – இவ்வளவும், பெற்றெடுத்தது ஒரு பெண் தெய்வம் என்றால், பொருத்தமிருக்கிறதா! புராணமாக இருந்தாலும், துளியாவது, அதிலே 'இப்படியும் நடந்திருக்கக் கூடும்' என்று கூறத்தக்க தன்மை இருக்க வேண்டுமே – என்று கேலி பேசுவோரைக் காண முடியும். இங்கு – இன்று!

ஜப்பானியர், இவ்வளவு மந்தமதி படைத்தவர்களா – நாடு பிறந்ததா, கடவுளின் கருவில்!! என்று ஏளனம் செய்வர்.

அவர்கள் இன்றும் வணங்கும், கண்ணன், பாலகனாக இருந்தபோது, தாய் அடித்திட வாய்திறந்து அழுதபோது, ஜப்பான் மட்டுமல்ல, பிரபஞ்சமே வாயில் தெரிந்தது – புண்ய கதை! வியாசர் விருந்து!!

நாடு, கடவுள் மூலம் பிறந்தது என்று வேறு நாட்டான் கதை கூறும்போது, கேலி செய்ய முடிகிறது.

இங்கே, கடவுள், குழந்தை வடிவுடன் இருந்தபோது, அவர் வாயிலே, பிரபஞ்சமே தெரிந்ததாகப் 'புண்யகதை' இருக்கிறது. அதை நம்ப முடியவில்லையே என்று விநயமாகக் கூறினாலும், ஆச்சாரியாருக்குக் கோபம் கொப்பளிக்கிறது, கோல் எடுக்கிறார் – எழுதுகோல்!!

ஜப்பானியர், இசனாகி ஜப்பானைப் பெற்றெடுத்த கதையைக் கடவுட் காதையாகக் கொண்டிருந்த காலத்தில், இன்று இல்லை. இங்கு,

''பாலன் வாயைத் திறந்தான்
கோபாலன் வாயைத் திறந்தான்.''

என்று நவீன விஞ்ஞானக் கருவியான ரேடியோவில் இசை அரசிகள் பாடுகின்றனர் – பக்தர்கள் சொக்கி நிற்கின்றனர்!!

ஜப்பானியர்களிடம் புத்தறிவு பிறந்துவிட்டது – குமாரி சூர்யாவைக் கடவுளாகக் கொண்டில்லை.

தேவ கதை என்று கூறிவிட்டால், அதுபற்றித் துளியும் சந்தேகம் கொள்ளலாகாது, காரணம், விளக்கம் கேட்பது கூடாது, கேட்பது பாபம், நாத்திகம் என்று ஜப்பானிய மக்கள் நம்பிக் கிடந்தவரையில், இதுபோன்ற புராணங்கள், பூஜாமாடத்தில் இருந்து வந்தன – மக்கள் உள்ளத்தில் அரசோச்சின. மூடநம்பிக்கை கப்பிக் கொண்டிருந்த காலத்தில், புராணீகன், ஜப்பான் நாட்டின் உற்பத்திக்கு இப்படி ஒரு கதை கட்டினான். இத்துடன் விட்டானா!

விடுவானா? புராணீகனாயிற்றே!!

ஜப்பான் முதலிய தீவுகளை ஈன்றெடுத்தான பிறகு, இசனாமி, அக்கினி தேவனைப் பெற்றெடுத்தாள், அக்னி சுதவன், சாமான்யமானவனா! பிறக்கும்போதே தாயைக் கருக்கி விட்டான்.

இசனாமி இறந்து பட்டாள்!

கடவுள்தான்!! ஆனால் கடவுளுருக்கும் பிறப்பும் இறப்பும் உண்டென்றான் புராணீகன் – ஆமாம், சாமி! என்றனர் மக்கள் – பக்தர்களாக இருந்ததால்! இப்போதும் இங்கு, எதைத்தான் புராணீகன் சொல்லாமலிருக்கிறான் – நம்பத் தகாதது என்று எதைத்தான் பக்தர்கள் ஒதுக்கித் தள்ளிவிடுகிறார்கள்! மகேசன் செயலால், மலம், மலர்மணம் வீசும் என்று புராணீகன் சொன்னால், ஆமாம்! ஆமாம்! நமது 'பாபம்' காரணமாகத்தான் நமக்கு மலத்திலிருந்து மலர்மணம் வீசவில்லை, இதை வெளியே கூறுவதும் அவமானம். எனவே நாமும் 'நாலு பேருடன்' ஒத்துப் பேசுவோம் என்ன மணம்! என்ன மணம் என் அப்பன் அருளல்லவா இது!'' என்று கூறிட இன்னும் இங்குப் பக்தர்கள் இருக்கத்தானே செய்கிறார்கள்!

பக்தகோடிகள் மிகுந்திருந்த காலம் – பகுத்தறிவு கிளம்பாத காலம், பச்சைப் புளுகுகளைப் பாராயணத்துக்கு ஏற்ற புராணம் என்றான் – நெஞ்சு நெக்குருகக் கேட்டு ரசித்தனர்!

இறந்துபட்டாள் இசனாமி என்றதும், இசனாகி பதறினான், கதறினான். "அவளின்றி நான் உயிர்தரியேன்! எங்கு சென்றாலும், உடன் செல்வேன்! உயிர் பிரிந்தபின் உடல் எதற்கு, என் உள்ளத்தின் ஒளிவிளக்கு அணைந்தபின் எனக்கு வாழ்வு எதற்கு?'' என்றெல்லாம் உருகிக் கூறினான், ஓடினான், ஓடினான், காதற் கிழத்தியைக் கண்டுபிடித்திட.

பாதாளலோகம் சென்றான்!!

ஜப்பானியப் புராணீகனும், விண்ணிலே கடவுளரையும், மண்ணிலே மானிடரையும், மண்ணுக்கு அடியிலே இறந்தோரையும் இருக்கச் செய்தான் – புராண மூலம்!

இசனாகி, பாதாள லோகத்தில் கண்டான் இசனாகியை.

இசனாமி இறந்துபட்டாள் – எத்தனை கனிவுடன் கணவன் அழைத்தாலும் உயிர் பெற்றிட முடியாதபடி, உடலும் உருக்குலைந்து போய்விட்டிருந்தது.

கண்டான், கண்ணீர் உகுத்தான்!

அழிந்தோரின் அவனியிலே, அழகரசி கூழாகிக் கிடக்கிறாள்.

இன்பம் தந்தாள்! எனக்கு வாழ்வின் இரகசியம் இதுவென்று அறியும் வாய்ப்பு அளித்தாள்!

நாடு, பல பெற்றாள், நாரிமணி.

நாசகாலன் பிறந்தான், என் நளினி மாண்டாள், நான் நடைப்பிணமானேன்.

எங்கே அக்கொடியவன்?

என் கோமளவல்லியின் சாவுக்குக் காரணமாக இருந்தவன் எங்கே!

அவனை அழித்தொழித்தாலொழிய, என் கொதிப்பு அடங்காது.

இசனாகி இவ்வாறு புலம்பினான். கோபப் பொறி பறக்கும் கண்ணினனானான் – அக்னிதேவனைக் கொன்றே போட்டான்!

அக்னிதேவன் இறந்துபட்டான் – அவனுடைய இறப்பின் மூலம், எண்ணற்ற புதுக் கடவுளர் பலர் பிறந்தனர்.

கோபம் ஓரளவு தணிந்த நிலையில், இசனாகி, தன்னைச் சுற்றிலும் கிடந்த பிணக் குவியலைக் கண்டான்.

என்ன கோரம்! என்ன கோரம்!!

எங்கும் அழிவு! எப்பக்கமும் நாசம்!!

இந்தக் கோரத்தைக் கண்ட, என் கண்கள், கேவலம் புண்களன்றோ! என்று சோகித்தான்.

இக்கோரக் காட்சியைக் கண்டதால் ஏற்பட்ட கறைபோக கண்களைக் கழுவிக் கொண்டான்.

அப்போது, அவனுடைய இடது கண் வழியாகச் சூரியா பிறந்தாள்! வலக்கண்ணிலிருந்து, சந்திரன்!!

கண்ணிலிருந்து கடவுளா? – என்று கேட்டுக் கைகொட்டிச் சிரிக்கத் தோன்றுகிறதா – ஜப்பான் எத்தன் மட்டுமல்ல, இங்கு முன்னாளில் இருந்த எத்தர்களும், இதுபோலக் கதைகள் கட்டினர்.

தும்மலிலிருந்து இங்குத் 'தேவதை' பிறந்த கதை உண்டு!

கொட்டாவி விட்டபோது, குட்டிக் கடவுள் பிறந்ததுண்டு.

இவ்வளவு ஏன்? ஆறுமுகப் பெருமானின் திரு அவதாரக் கதையைப் பாருங்களேன் – நாடகம் கூட நடக்கிறது, இந்த

நாட்களில். கைலைவாசனம் நெற்றிக் கண்ணிலிருந்து கிளம்பிய ஆறு பொறிகள், சரவணப் பொய்கை சேர்ந்து, ஆறுமுகன் பிறக்கிறானல்லவா!

இன்னும் இது இங்கு புண்ய கதையாயிற்றே!

நவநாகரீகத்தின் சுவைமிக்க சாறு பருகி, வாழ்வில் இனிப்புப் பெற்றிருப்போர்கூட அல்லவா, நாடக மேடையில், இக்காட்சி காட்டப்படும்போது மெய்சிலிர்க்கிறது என்று கூறுகிறார்கள்.

ஜப்பானில், இன்று குமாரி சூர்யாவின் பிறப்புப் பற்றி நாடகமாடிட நாடகக் கேசரிகள் இல்லை. இங்கு இருப்பது மட்டுமல்ல, நாடு ஆள வந்துவிட்டு, ஏடு தூக்கி ஆடிடும் போக்கினர், நாவாரப் புகழவும் செய்கின்றனர்.

நாவாரத்தான்!!

சூரியச் சந்தார் பிறந்தான பிறகு, மூக்கிலிருந்து வருணன் (மழைக்கடவுள்) பிறந்தானாம்.

அழுதால் கடவுள்! சிந்தினால் கடவுள்!

அப்பப்பா! ஜப்பானியப் புராணீகன், போட்டி போட்டுக் கொண்டு புரட்டுகளைக் கொட்டுகிறான் – பூஜாரிகள் பாடு, கொண்டாட்டம்.

ஜப்பான் நாட்டு வருணன் பெயர், சூசான்!

இந்தக் கடவுள், நமது கண்ணன்போல, கோலாகலத்தில் ஈடுபாடுடையவன்!

கூடப்பிறந்தவர்களுக்கே தொல்லை தரத் தொடங்கினான். குமாரி சூர்யாவுக்குக் கடுங்கோபம் பிறந்தது – சேச்சே! இப்படிப்பட்ட துடுக்கர் மத்தியில் இருந்தாலும் 'பாபம்' என்று கருதிக் கொண்டு, ஒரு குகைக்குள்ளே சென்று ஒளிந்து கொண்டாள் – வெளியே வர மறுத்தாள்.

நமது நாட்டுப் புராணத்திலும் இப்படிச் சம்பவங்கள் உண்டு.

கோபம் காரணமாக, அடிக்கடி கடவுளர் வேலை நிறுத்தம் செய்வர்.

கொண்டாடி, புகழ்பாடி, கோரிக்கையை நிறைவேற்றி, மீண்டும் பழையபடி அக்கடவுளரை அழைத்து வருவர், மற்றக் கடவுளர்.

குமாரி சூர்யா – ஒளிமாதா – உயிரளிப்போள் – உலகின் விளக்கு – தேவதீபம் – இல்லையென்றால், நிலைமை என்னாகும்?

திகைத்த கடவுளர், எப்படியேனும் சூர்யாவை குகையை விட்டு வெளியே வரச் செய்தாக வேண்டும் என்று யோசித்தனர். மானிடர்களா – யோசனை உதிக்காமலிருக்க? கடவுளர்களுக்கு – அறிவுக் கூர்மைக்கு என்ன பஞ்சம்?

யுக்தி கண்டறிந்தனர்.

குகைவாயிலில் நின்று கொண்டு, நாட்டியமாடினர்.

நாட்டியம் என்றால் சாதாரணமாக கண்வெட்டு, கழுத்து வெட்டு, இடைநெளிவு, உடல் துவளல், கைகாட்டல், காமமூட்டல், என்பவைகள் மட்டும் என்று எண்ணுவீர்கள்.

இல்லை! கடவுளரின் நாட்டியம், இந்த அளவோடு நின்று விடவில்லை.

நிர்வாண நாட்டியம்! கோணல் சேட்டைகளுடன்!

சிரித்தனர், ஆடல் கண்ட மற்றக் கடவுளர். சிரிப்பொலி கேட்டு, குமாரி சூர்யா, என்னவென்று அறிய, குகையை விட்டு வெளியே வந்தாள்.

கண்ணாடி ஒன்றினை அவள் எதிரே காட்டி, கடவுளர் கூறினாராம், "கோபம் கொண்ட குமாரி! நீ குகைக்குள்ளே ஒளிந்து கொண்டால் குடியா முழுகிப் போய்விடும் – இதோ பார்த்தாயா, எமக்கு வேறோர் சூர்யா கிடைத்து விட்டாள் – என்று கூறினராம்.

ஏதேது விபரீதம் விளைந்துவிடும் போலிருக்கிறதே. நம்மை இவர்கள் உதாசீனம் செய்து விடுவார்கள் போலிருக்கிறதே என்று பயந்த குமாரி சூர்யா, மீண்டும் கடவுளர் உலகில் இருக்கச் சம்மதம் தந்தாளாம்!

எப்படி, கடவுளர் சமர்த்து! கோபம் கொண்ட குமாரியை, எவ்வளவு தந்திரமாக வழிக்குக் கொண்டு வந்தார்கள் பார்த்தீர்களா!!

குமாரி சூர்யாவுக்கு, கண்ணாடியும் தெரியாது – தன் உருவத்தை அதிலே காட்டி ஏய்க்கிறார்கள் என்பதும் தெரியாது!

அவ்வளவு தெளிவு தேவிக்கு! ஜப்பானில், குமாரி சூர்யாவின் மக்களே மன்னர்களாயினர், என்கிறான் புராணீகன்.

அந்த மன்னர்கள், அவ்வப்போது, கடவுளர் பட்டியலே தருவார்களாம், மக்களுக்கு.

இன்னின்ன தெய்வங்களைத் தொழலாம் என்று உத்திரவு பிறப்பிப்பார்கள் – மக்கள் பூஜை செய்வர்!

பூஜையைப் பெற்றுக் கொண்டு வந்த கடவுள் சிலரை, மன்னர்கள், பதவியிலிருந்து நீக்கியும் விடுவதுண்டாம்,

இனி, இன்னின்ன கடவுளரைக் கும்பிடக் கூடாது என்று அரசன் ஆணையிடுவானாம், மக்கள் பூஜை போடுவதை நிறுத்தி விடுவாராம்!

இப்போது மன்னன் பிறப்பித்த உத்தரவால் அல்ல, மதிபெற்றதால், மறுமலர்ச்சி ஏற்பட்டதால் கவைக்குதவாத கற்பனைகளைக் கடவுட் கதைகள் என்று நம்பிக் கொண்டிருந்த ஏமாளித்தனம் ஒழிந்ததால், ஜப்பானியர் குமாரி சூர்யாவை மாஜியாக்கி விட்டனர்.

கோயில்களில் கொலுவீற்றிருந்த எண்ணற்ற கடவுளர், மாஜிகளாயினர்!

ஜப்பானும், வேறு பல நாடுகளும், அறிவுத்துறையிலே கண்ட உண்மைகளை இங்கு, ஏற்க மறுக்கிறார்கள் – இருளன் காட்டேரியிலிருந்து இரவிகுலச் சோமன் வரையிலே 'கொலு' வைத்து குழந்தை விளையாட்டு நடத்திக் கொண்டு, ஆதியை அறிந்துவிட்டோம், அய்யனைத் தெரிந்து கொண்டோம்; அருளைப் பெற்றுவிட்டோம்; ஆத்திகத்தை வளர்த்துவிட்டோம் என்று பேசி மகிழ்கின்றனர். ஜப்பானிலோ, குமாரி சூர்யா; மாஜி!

**14-1-1955**

❄ ❄ ❄ ❄ ❄